

# மனநலம் பேணும் குணசீலம்!

Author: - கே. ஆர். பிச்சுமணி

- First Published: Oct 9, 2014 3:28 PM
- Last Updated: Oct 9, 2014 3:28 PM

## வைகுண்ட வாசனாகிய பெருமான் குணசீல மகரிஷியின் தவத்திற்கிணங்கி ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேசனாக காட்சியளித்த அற்புத திருத்தலம் குணசீலம்.

வைகுண்ட வாசனாகிய பெருமான் குணசீல மகரிஷியின் தவத்திற்கிணங்கி ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேசனாக காட்சியளித்த அற்புத திருத்தலம் குணசீலம்.

குணசீல மகரிஷி வேதங்கள் ஆகமங்களை பயின்று வந்த சமயத்தில் குருநாதருடன் பல ஷேத்திரங்களுக்கு சென்றார். மேலும் திருவேங்கடத்தில் எழுந்தருளி அருள்பொழியும் ஸ்ரீவேங்கடேசப் பெருமாளையும் சேவித்து ஆனந்தம் கொண்டார். அப்போது பெருமானை காவிரியின் கரையில் உள்ள தமது ஆசிரமத்தில் எழுந்தருளுமாறு பிரார்த்தித்தார். ஆனால் திருவேங்கடமுடையானோ, ""தான் இக்கலியுகம் நிறைவுறும் வரையில் திருமலையில் வசிக்க சங்கல்பம் கொண்டுள்ளதால், நீர் உமது ஆசிரமம் சென்று தவம் செய்! எனது சுவரூபமாக வைகுண்டத்திலிருந்து வாசுதேவனே உமக்கு காட்சியளிப்பார்!'' என அருளினார்.

அதன்படி குணசீலர் குருநாதரிடம் ஆசிபெற்று காவிரிக் கரையிலுள்ள தமது ஆசிரமத்தில் கடும்

தவம் புரிந்தார். வைகுண்ட வாசனாகிய எம்பெருமான் மனம் இறங்கி, புரட்டாசி மாதம், திருவோண நட்சத்திரம், சனிக்கிழமை, சிம்மலக்னம் கூடிய சுபதினத்தில் ஸ்ரீதேவியுடன் கருடாரூடராக குணசீலருக்கு காட்சியளித்தார். குணசீலரிடம் ""வேண்டிய வரத்தைக் கேள்'' என்று பெருமான் உரைக்க, குணசீலர் ""தாங்கள் இந்த அழகிய காவிரி கரையில் திவ்ய மங்கள விக்ரஹ ஸ்வரூபராய் எழுந்தருளி நித்யவாசம் செய்ய வேண்டும்'' என பிரார்த்தித்தார். அதன்படி, ஸ்ரீ வேங்கடேச சுவரூபராக திருமகளை மார்பினில் தரித்து சங்கு சக்ரதாரியாய் வரத, கடக ஹஸ்தத்துடன் நின்ற திருக்கோலத்தில் ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேசனாக பிரசன்னமானார். தவத்தினால் கிடைக்கப்பெற்ற, ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேசனை குணசீலர் மிகச்சிறந்த ஸ்ரீ வைகானஸ பகவத்சாஸ்தர முறைப்படி பலகாலங்கள் குறைவர ஆராதனம் செய்தார். அதன்பின் தமது குருநாதரிடமிருந்து நைமிசாரண்யம் செல்ல அழைப்புவர பெருமானிடம் உத்தரவு பெற்று அவருக்கு ஆராதனம் செய்ய தனது சிஷ்யனை அமர்த்திவிட்டு குணசீலர் நைமிசாரண்யம் சென்றார்.

குணசீலரின் சீடர் ஆராதனம் செய்துவந்தபோது காவிரியில் ஏற்பட்ட அதிக வெள்ளப்பெருக்கு, கொடிய விலங்குகளின் தாக்குதல்கள் போன்றவற்றால் சுவாமிக்கு பூஜைகள் செய்வது நின்றுபோனது. இந்நிலையில் எம்பெருமான் தம்மை முழுவதும் புற்றினால் மறைத்துக் கொண்டார்.

பல காலங்களுக்குப்பின் திருச்சி உறையூரை தலைநகராகக் கொண்டு ஞானவர்மன் எனும் அரசன் ஆட்சிபுரிந்து வந்தான். அரசனின் கோசாலைக்கு அருகில்தான் அந்த புற்று இருந்தது. ஒரு சமயம் கறந்து வைத்த குடங்களில் பால் காணாமல் போக அரசனுக்கு என்ன பதில் சொல்வது என கவலையுற்றனர் கோசாலையை பாராமரிப்பவர்கள். அப்போது அவர்களில் வயது முதிர்ந்த ஒருவருக்கு அருள் ஏற்பட்டு இப்புற்றில் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாள் எழுந்தருளி இருப்பதாகச் சொல்ல, அதனை அரசனிடம் தெரிவித்தனர். புற்றினை பார்வையிட வந்த அரசனிடம் புற்று முழுவதையும் பால் கொண்டு கரைக்கும்படியாக முதியவர் ஒருவர் தெரிவிக்க அதன்படி ஆயிரமாயிரம் குடங்கள் பால் கொண்டு கரைத்தனர். அப்போது எம்பெருமான் ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேசனாக காட்சியளித்தார். தனக்கு இங்கு ஓர் ஆலயம் அமைக்குமாறும் அதனைத் தொடர்ந்து ஸ்ரீ வைகானஸ பகவத்சாஸ்திர முறைப்படி பூஜை செய்யவும் ஆஞ்யாபித்த எம்பெருமான் அரசனை அருகிலேயே அரண்மனை அமைத்துகொண்டு தினமும் தன்னை வந்து வணங்கும்படியும் அருளினார். அதன்படி அரசனும் ஸ்ரீ பிரஸன்ன வேங்கடேசப் பெருமானை அனுதினமும் வழிபட்டு வந்தான்.

சிருததேவன் என்பவருக்கு கண்பார்வை கிடைத்ததும், பகுவிராஜனின் முடத்தன்மை

நீங்கியதும, தேவதாசன் என்ற ஊமைக் குழந்தை பேசியதும், விஸ்வகுப்தன் காந்திமதி தம்பதிகள் புத்திரப்பேறு பெற்றதும், பிருதுகீர்த்தி சாருமதி தம்பதிகளுக்கு சத்புத்திரனை அளித்ததும் ஸ்ரீ வேங்கடேசனின் பரம கருணையினாலே என குணசீல மஹாத்மியம் கூறுகிறது,

குணசீலப் பெருமாளை சந்நிதியில் தங்கியிருந்து 48 நாட்கள் விரதமிருந்து காவேரி நதியில் இருவேளை தினமும் நீராடி பூஜைகளிலும் கலந்துகொண்டு பக்தியுடன் வழிபட்டதால் வேண்டுதல்கள் கைவரப் பெற்றவர்கள் ஏராளம்!

மனநலம் பாதிப்பு, பில்லி சூனியக் கோளாறுகள், நரம்புத்தளர்ச்சியால் பாதிக்கப்பட்டவர்கள் எம்பெருமானை முறைப்படி வணங்கினால் அவ்வினைகள் நீங்கி சுகமும், ஆரோக்கியமும் பெறுவர்.

திருப்பதிக்குச் சென்று பிரார்த்தனை செலுத்த இயலாதவர்கள், இத்தலத்தில் செலுத்தி சுகம் பெறலாம். இத்தலம் தென்திருப்பதி எனவும் புகழப்படுகிறது.

மனநலம் பாதிக்கப்பட்டவர்கள் தங்கி வழிபடும் வகையில் மனநல மறுவாழ்வு மையம் ஒன்றும் தமிழ்நாடு அரசு மாற்றுத்திறனாளிகள் நலத்துறை அனுமதியுடன் திருக்கோயில் நிர்வாகத்தால் நிர்வகிக்கப்பட்டு வருகிறது.

இத்திருக்கோயில் நிர்வாகமானது பரம்பரை வழிவழிவரும் அர்ச்சகர்கள் குழுவால் திறம்பட நிர்வகிக்கப்பட்டுவருகிறது.

தமிழ்நாடு இந்து சமய அறநிலையத்துறையின் அனுமதியுடன் நிர்வாகம் மற்றும் திருப்பணிகள் சிறப்பாக நடைபெற்றுவருகின்றன.

ஞானவர்ம அரசனால் கட்டப்பட்ட எளிய ஆலயம், சமீபகாலத்தில் புதிதாக அமைக்கப்பட்டு மஹா சம்ப்ரோஷணம் கடந்த 2004 ஆம் ஆண்டு நடைபெற்றது. ஸ்ரீ வைகாநஸ ஆகம முறைப்படி அவ்வழி வந்த பரம்பரை அர்ச்சகர்களால் நடத்தப்படுகிறது. இன்றளவும், நித்தியபூஜைகளும், திருமலை திருப்பதியைப் போன்றே உத்ஸவங்களும் இவ்வாலயத்தில் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

குணசீல மகரிஷிக்கு வைகுண்ட வாசுதேவன் காட்சியளித்த, புரட்டாசி மாதம், திருவோண நட்சத்திர நாளை கொண்டு பதினோரு நாள்கள் பிரம்மோத்ஸவம் மிகச்சிறப்பாக கொண்டாடப்படுகிறது.

தகவல்களுக்கு: 04326-275310/ 8903275310.